[22nd September 1961

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) & (*b*) The answer [a] is placed on the table of the House.

SRI R. SRINIVASA IYER : இந்தப் பதிலில் கொடுக்கப்பட்டிருப்பதில் எவ்வளவு தொகை எய்டாகக்கொடுக்கப்பட்டிருக்கிறது என்கிற புள்ளி விவரம் இருக்கிறது. இவ்விதம் கடன் வாங்குகிறவர்கள் எந்தெந்தக் காரணத்திற்காக வாங்குகிறார்களோ அந்தக் காரணத்திற்காக சரியாக பிரயோசனப்படுத்துகிறார்களா என்பதைப் பற்றி விசாரணை செய்ய அதிகாரிகள் யாராவது நியமிக்கப்பட்டிருக்கிறார்களா ? அப்படியானால் எங்கேயாவது இவ்விதம் தவறுதல்கள் நடந்திருப்பதாக சர்க்காருக்குத் தகவல்கள் வந்திருக்கின்றதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அந்தத் தகவல் இப்போது என்னிடம் இல்லை. சாதாரணமாக இந்தக் கடன்கள் சரியான முறையில் உபயோகிக்கப்படுகின்றனவா என்று கவனிக்கப்பட்டு வருகிறது. தவறுதல்கள் நடக்கின்றது என்று சர்க்காருக்குத் தகவல்கள் ஏதாவது வந்தால் அதன் பேரில் நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்படும்.

SRI J. MATHA GOWDER : சிறிய தொழில்களை ஊக்குவிப்பதற்காக கடன்கொடுக்கும் பட்டியலில் தேயிலை உற்பத்தி செய்யக்கூடிய தொழிலுக்கு இந்த எய்ட் கொடுக்கப்பட்டிருப்பதாகத் தெரியவில்லை. அதற்குக் காரணம் என்னவென்று தெரியவில்லை. ஆகவே இனிமேலாவது தேயிலை உற்பத்திக்கு கடன் கொடுக்க சர்க்கார் முன்வருமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : தேயிலை உற்பத்தி செய்கின்றவர்கள் சேர்ந்து அரசாங்கத்திற்கு விண்ணப்பித்துக்கொண்டால் அரசாங்கம் அதைப் பற்றிப் பரிசிலனை செய்யும்.

*Industrial development*

* 1702 Q.—SRI N. R. THIAGARAJAN : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

நமது ராஜ்ய கைத்தொழில் இலாகாவுக்கு மத்திய சர்க்கார் இரண்டாவது ஐந்தாண்டு திட்டத்திற்கு ஒதுக்கிய பணம் யாவும் செலவு செய்யப்பட்டதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Yes, Sir.

Tamil Text-books (10th Standard).

* 1703 Q.—SRI S. M. ANNAMALAI ; கனம் நிதி அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) இவ்வாண்டு பத்தாவது வகுப்பிற்கு (10th Standard) தமிழ்ப் புத்தகங்கள் (Tamil Texts) இதுவரை கிடைக்கவில்லை என்பது உண்மையா ?

(இ) இதனால் பாடங்களைக் குறைக்க வேண்டுமென்று ஆசிரியர்களுடைய கோரிக்கை சர்க்கார் கவனத்திற்குக் கொண்டுவரப்பட்டதா ?

(உ) அப்படியானால், அதைக் குறித்து சர்க்காரின் முடிவென்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (அ) Under the existing arrangements text-books for detailed study in the several languages for the S.S.L.C. Public Examination are printed and published by the Madras University. It has been ascertained that the Tamil text-books for the S.S.L.C. (X Standard) Public Examination 1962 were released for sale on 29th July 1961.

(இ) Yes, Sir.

---

[a] Printed as Appendix II on pages 504-506 infra.